# செங்குந்த மித்திரன்

மலர்:21 இதழ்: 12 | டிசம்பர் – 2021 | Date of Publication 25th day of Every month | தனிப்பிரதி விலை: ₹ 15/–

## முருகப் பெருமானின் போர்ப்படைத் தளபதிகள்
## வீரபாகு உள்ளிட்ட செங்குந்த கைக்கோள நவவீரர்கள்



வீரமார்த்தாண்ட செங்குந்தர் வீரராக்கத்த செங்குந்தர் வீரபாகு செங்குந்தர் வீரகேசரி செங்குந்தர் வீரமகேந்திர செங்குந்தர்



வீரதீர செங்குந்தர் வீராந்தக செங்குந்தர் வீரமகேசுவர செங்குந்தர் வீரபுராந்தக செங்குந்தர்

வாழ்க வாழ்க
செங்குந்தர்!

வெல்க வெல்க
செங்குந்தம்!!



# செங்குந்தர் உறுதிமொழி

நாம் செங்குந்த குலக்கடவுள் அருள்மிகு முருகப்பெருமான் ஆணையாக, மனசாட்சியுடன் கீழ்க்கண்டவாறு உறுதி பூணுகிறோம்.

1. நாம் இந்தியக் குடிமக்களாய் இருப்பதை, பெருமையாகக் கருதுகிறோம். நமது நாட்டின் அரசியல் அமைப்புச் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு, நாட்டின் ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் பாடுபடுவோம்.
2. நாம், செங்குந்தர் என்ற உணர்வுடன் ஒன்றுபட்டு, நமது சங்கத்தின் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு சமூக, பொருளாதார, கல்வி, தொழில், கலாச்சார முன்னேற்றத்திற்குப் பாடுபடுவோம். சமூக நலம் காப்போம்.
3. நாம் மற்ற இனத்தவரிடம், மனித நேயம் கொண்டு, நட்புடனும், அன்புடனும் பழகுவோம்.
4. நாம், நமது உரிமைகளைப் பாதுகாக்க எப்பொழுதும் விழிப்புடன் செயல்படுவோம்.
5. நாம் நமது சங்கம் நிறுவிய சான்றோர்களை நினைவில் கொண்டு, சங்கத்தை நாளும் வளர்த்திடுவோம்.

# தலைவர் மடல்

கடவுள் நம்பிக்கை
என்றும் வீணாவதில்லை
நல்லதே நடக்கும் என்றுணர்ந்த
செங்குந்த சொந்தங்களுக்கு வணக்கம்.

வசந்த காலத்தில் மாமரங்களில் மாந்தளிர்களும், மலர்களும் பூத்துக் குலுங்குவதைப்போல வருகின்ற 2022 ஆங்கிலப் புத்தாண்டு அனைவரது வாழ்விலும் அன்பையும், மகிழ்ச்சியையும், ஆரோக்கியமான வாழ்வையும், நிறைவான செல்வத்தையும் கொடுக்கட்டும்.

*நாளைய வாழ்க்கை என்னும் புதுப்பானையில்*
*புதிய எண்ணங்கள்*
*புதிய நண்பர்கள்*
*புதிய முயற்சிகள்*
*புதிய நம்பிக்கைகள்*
*புதிய திட்டங்கள் சேர்த்து*
*சோர்வில்லா செயல்கள் என்னும் தீயை மூட்டி*
*பொங்கட்டும் புதுவாழ்வு!*



அனைத்து செங்குந்த உறவுகளுக்கும் இனிய ஆங்கிலப் புத்தாண்டு மற்றும் தமிழர் திருநாள் நல்வாழ்த்துக்கள்!

அன்புடன்,

KPK செல்வராஜ்

**பெருமாளின் கோயில்களில் மிக முக்கியமான கோயில்களும் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட கோயில்களும் திவ்விய தேசங்கள் என்று போற்றப்படுகின்றன. மொத்தம் 108 திவ்விய தேசங்கள் என்று போற்றி வணங்கி வருகிறோம். அப்படியான அற்புதத் தலங்களில், திருநீர்மலை திருத்தலமும் ஒன்று. வாழ்வில் ஒருமுறையேனும் திருநீர்மலை திவ்விய க்ஷேத்திரத்துக்கு வந்து, நான்கு வித பெருமாளையும் கண்ணாரத் தரிசித்து வேண்டினால், நம் முன் ஜென்மத்துப் பாவங்கள் அனைத்தும் விலகும் என்பது ஐதீகம்.**

## திருப்பமும் சிறப்பான மாற்றமும் தரும்

# திருநீர்மலை!

### தல வரலாறு

ராமாயணம் எழுதிய வால்மீகி மகரிஷிக்கு, ராமபிரானை, திருமணக்கோலத்தில் தரிசிக்க வேண்டும் என்று ஆசை எழுந்தது. அவர் இத்தலம் வந்து சுவாமியை வேண்டி தவமிருந்தார்.

பெருமாள் அவருக்கு சீதா, லட்சுமணன், பரதன், சத்ருக்கனன் ஆகியோருடன் திருமணக்கோலத்தில் காட்சி தந்தார். அப்போது வால்மீகி, தனக்கு காட்டிய தரிசனப்படியே நிரந்தரமாக தங்கும்படி வேண்டினார். சுவாமியும் அவ்வாறே அருளினார். இவர் மலையடிவாரத்தில் தனிக்கோயிலில் இருக்கிறார். நீர் சூழ்ந்த மலையின் மத்தியில் இருந்ததால் இவருக்கு, நீர்வண்ணப்பெருமாள் என்றும், தலத்திற்கு திருநீர்மலை என்றும் பெயர் ஏற்பட்டது. நீல நிற மேனி உடையவர் என்பதால் இவருக்கு "நீலவண்ணப்பெருமாள்' என்ற பெயரும் உண்டு. ராமபிரானுக்கும் சன்னதி இருக்கிறது. இவரது சன்னதியில், சுவாமியை வணங்கியபடி சுயம்புவாக தோன்றிய வால்மீகி காட்சி தருகிறார்.

### ஒரே தலத்தில் நான்கு பெருமாள்

இத்தலத்து பெருமாளை தரிசிக்க திருமங்கையாழ்வார்





வந்தபோது, மலையைச் சுற்றிலும் நீர் நிறைந்திருந்தது. அவரால் நீரைக் கடந்து சென்று சுவாமியை தரிசிக்க முடியவில்லை. ஆனாலும், அவர் காத்திருந்து சுவாமியை தரிசித்துவிட்டுச் செல்வதென முடிவெடுத்தார். கோயில் எதிரேயுள்ள மற்றொரு மலையில் தங்கினார். நாட்கள் நகர்ந்ததே தவிர, தண்ணீர் குறைந்தபாடில்லை. ஆனாலும் பெருமாளை தரிசிக்க வேண்டுமென்பதில் தீர்க்கமாக இருந்த திருமங்கையாழ்வார், தண்ணீர் வடியும் வரை காத்திருந்து, சுவாமியை தரிசிக்கச் சென்றார்.

தன் மீது பாசம் கொண்ட பக்தனுக்காக பெருமாள் நின்ற கோலத்தில் நீர்வண்ணப்பெருமாள், இருந்த கோலத்தில் நரசிம்மர், சயன கோலத்தில் ரங்கநாதர், நடந்த கோலத்தில் உலகலந்த பெருமாள் என நான்கு கோலங்கள் காட்டியருளினார். இந்த நால்வரையும் இத்தலத்தில் தரிசிக்கலாம். நீர்வண்ணப்பெருமாள் மலையடிவாரத்திலுள்ள கோயிலிலும், ரங்கநாதர், நரசிம்மர், உலகளந்த பெருமாள் ஆகியோர் மலைக்கோயிலிலும் அருள்கின்றனர்.

## குழந்தை நரசிம்மர்

நரசிம்மரை உக்கிரமான கோலத்தில் தரிசித்திருப்பீர்கள். அவரை சாந்தமாக, பால ரூபத்தில் இத்தலத்தில் தரிசிக்கலாம். இரணியனை சம்ஹாரம் செய்ய நரசிம்ம அவதாரம் எடுத்த மகாவிஷ்ணு, உக்கிரமாக இருந்தார். இந்த வடிவம் கண்டு பிரகலாதன் பயந்தான். எனவே, சுவாமி தன் பக்தனுக்காக உக்கிர கோலத்தை மாற்றி, அவனைப்போலவே பால ரூபத்தில் தரிசனம் தந்தார்.

இவரை "பால நரசிம்மர்' என்கின்றனர். மலைக்கோயிலில் இவருக்கு சன்னதி இருக்கிறது. இவருக்கு பின்புறம் நரசிம்மர், சுயரூபத்துடன் இரண்டு கரங்களுடன் காட்சி தருகிறார். இடக்கை ஆட்காட்டி விரலை உயர்த்திக் காட்டுகிறார். இவரிடம் சங்கு, சக்கரம் இல்லை. இவ்வாறு இங்கு பால வடிவம் மற்றும் சுயரூபம் என இரண்டு வடிவங்களில் நரசிம்மரை தரிசிக்கலாம்.

## கோபுரம் ராமருக்கு, கொடிமரம் நீர்வண்ணருக்கு

கோயில்களில் சுவாமி சன்னதிக்கு எதிரில் ராஜகோபுரம், பலிபீடம், கொடிமரம் ஆகியன ஒரே வரிசையில் இருக்கும். ஆனால், இங்கு பலிபீடம், கொடிமரம் இரண்டும்



ராஜகோபுரத்திலிருந்து விலகி தனியே உள்ளது. வால்மீகிக்காக ராமராகவும், நீர்வண்ணப்பெருமாளாகவும் மகாவிஷ்ணு காட்சி தந்ததால், இவ்விரு மூர்த்திகளும் இத்தலத்தில் பிரதானம் பெறுகின்றனர். எனவே, இவர்களுக்கு முக்கியத்துவம் தரும்விதமாக ராமர் சன்னதி எதிரில் ராஜகோபுரமும், நீர்வண்ணர் எதிரில் கொடிமரமும் அமைக்கப்பட்டுள்ளன.



பொதுவாக பெருமாள் கோயில்களில் உற்சவர் சிலையை மூலவர் முன்பு வைப்பது வழக்கம். இக்கோயிலில் மூலவர் ரங்கநாதர் மலைக்கோயிலிலும், உற்சவர் அழகியமணவாளர் அடிவாரத்திலுள்ள கோயிலிலும் காட்சி தருகின்றனர். சித்திரை பிரம்மோற்ஸவ கொடியேற்றம் மற்றும் கொடி இறக்கம், பங்குனி உத்திரத்தில் நடக்கும் திருக்கல்யாணம் ஆகிய மூன்று நாட்கள் மட்டும் அழகிய மணவாளர் மலைக்கோயிலுக்கு எழுந்தருளுவார். அன்று மட்டுமே மூலவரையும், உற்சவரையும் ஒன்றாக தரிசிக்க முடியும்.

## இரட்டை திருவிழா

மலைக்கோயிலில் உள்ள ரங்கநாதருக்கு சித்திரையிலும், அடிவாரத்திலுள்ள நீர்வண்ணப்பெருமாளுக்கு பங்குனியிலும் பிரம்மோற்ஸவம் நடக்கிறது.



## குளம் ஒன்று தீர்த்தம் நான்கு

கும்பகோணத்திலுள்ள மகாமக குளத்தில் 19 தீர்த்தங்கள் சங்கமித்திருப்பதாக ஐதீகம். அதுபோல், இந்தக் கோயிலின் எதிரிலுள்ள புஷ்கரிணியில் (குளம்) சித்த தீர்த்தம், சொர்ண தீர்த்தம், காருண்ய தீர்த்தம், க்ஷீர தீர்த்தம் என நான்கு தீர்த்தங்கள் சங்கமித்துள்ளன.

இத்தனை பெருமைகளையும் ஒருங்கே பெற்ற திருத்தலமாக திகழ்கிறது திருநீர்மலை புண்ய க்ஷேத்திரம்.

திருமண யோகம் விரைவில் கிடைக்கப் பெறலாம். கல்யாணத் தடைகள் மொத்தமும் விலகும் என்கிறார்கள் ஆச்சார்யப் பெருமக்கள்.

வால்மீகி முனிவருக்கும் தொண்டைமான் மன்னருக்கும் இங்கே திருக்காட்சி தந்து வரமருளிய திருத்தலம் எனும் பெருமைமிக்கது திருநீர்மலை.

## அமைவிடம்

திருநீர்மலை திவ்ய தேசம், சென்னை பல்லாவரத்திலிருந்து 6. கி.மீ. தொலைவில் இருக்கிறது.

# தலைவர் சுற்றுப்பயண விபரம்

## ஜனவரி 2022

**02-01-2022 ஞாயிறு மாலை 5:00 மணி**

**B.குமாரபாளையம், நாமக்கல்**
கிளைச் சங்கத் தலைவர் டெல்லி திரு.A.கார்த்திகேயன் மகள் நாட்டிய நிகழ்ச்சி.

**15-01-2022 சனி காலை 9:00 மணி**

**B.குமாரபாளையம், நாமக்கல்**
கிளைச் சங்கங்களில் கொடியேற்று விழா

**23-01-2022 ஞாயிறு காலை 7:00 மணி**

**காஞ்சிபுரம்**
காஞ்சிபுரம் மாவட்ட செ.ம.சங்கத்தின் முன்னாள் பொருளாளர் திரு.K.குமரவேல் செங்குந்தர் மகள் திருமண விழா

## பிப்ரவரி 2022

**06-02-2022 ஞாயிறு காலை 9:00 மணி**

**சுவாமிமலை**
காரைக்கால் மாவட்டத் தலைவர் திரு.பொன்.தட்சிணாமூர்த்தி செங்குந்தர் மகன் திருமண விழா

**நிகழ்ச்சிகள் அனைத்தும் அரசு வழிகாட்டுதல்படி நடத்தப்படும்.**

### அறிவிப்பு

சங்கம் தொடர்பான செய்தி மற்றும் படங்கள் அனுப்பும்போது செங்குந்தமித்திரன் வளர்ச்சி நிதியையும் அனுப்பிவைக்கும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

**- பொதுச் செயலாளர்**

## திங்கள் ஒரு திருக்குறள்




**வாய்மை**
(பொய் பேசாமை)

**300**




| யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்துஒன்றும் வாய்மையின் நல்ல பிற. | யாம் மெய்யாகக் கண்ட அறங்களுள்,வாய்மையை விட உயர்ந்தனவாகக் கருதத்தக்க அறம் வேறு ஒன்றும் இல்லை. |
|---|---|

கருத்தோவியம்: **சிவன்மலை பித்தன் நடராசன்**

# செங்குந்த மித்திரன்

அன்புள்ள செங்குந்த சொந்தங்கள்
அனைவருக்கும் வணக்கம்.

செங்குந்தமித்திரன்
**சந்தா எண் 10000க்கும் கீழ்
உள்ள சந்தாவை புதுப்பிக்காத
உறுப்பினர்கள் ரூ.1000/-**
செலுத்தி சந்தாவைப் புதுப்பித்துக்
கொள்ள வேண்டுகிறோம்.
புதுப்பித்த சந்தாதாரர்களுக்கு
மட்டுமே அடுத்த மாதம் முதல்
செங்குந்தமித்திரன் இதழ்
அனுப்பப்படும் என்பதை அன்புடன்
தெரிவித்துக்கொள்கிறோம்.

– நிர்வாகம்

மித்திரன் புத்தகத்தின் மேல் ஒட்டிவரும் உங்கள்
முகவரியின் தொடக்கத்தில் குறிக்கப்பட்டுள்ள
எண்தான் உங்கள் சந்தா எண் ஆகும்.

# சோளிங்கரில் வாரியார் சுவாமிகள் குருபூஜை



வாரியார் கலை இலக்கிய மன்றம் சார்பாக ஆண்டுதோறும் நவம்பர்–7ம் நாள் வாரியார் குருபூஜை விழா அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோவில் வளாகத்தில் எழுந்தருளியுள்ள வாரியார் சுவாமி திருவுருவ சிலைக்கு மலர் அலங்காரம் செய்து வழிபடுவது வழக்கமாக நடைபெற்று வருகிறது.

இந்த ஆண்டும் 07.11.2021 ஞாயிற்று கிழமை காலை 9.00 மணி அளவில் வாரியார் சுவாமிக்கு அபிஷேகம் ,மலர் அலங்காரம் மற்றும் ஆராதனை நடைபெற்றது.

இந்த விழாவில் வாரியார் கலை இலக்கிய மன்றத்தினர்களான ச.சுந்தரமூர்த்தி ச. நித்யானந்தம், கு.சண்முகம், ட.அருணாசலம்,, வினாயகம், கதிர்வேல் வரதன், பா.விசுவநாதன், இரா.சுந்தரமூர்த்தி ஆகியோரும், நம் குல சொந்தங்களும் திரளாக பங்கேற்று விழாவினை சிறப்பித்தனர். மலர் அலங்காரம் மற்றும் அன்னதானம் ஆகியவற்றை வாரியார் கலை இலக்கிய மன்றத்தினர் ஏற்று போற்றினர். விழா காலை 10.30 மணி அளவில் இனிதாக நிறைவுபெற்றது.



# உள்ளாட்சித் தேர்தலில் வெற்றி பெற்ற செங்குந்த சொந்தங்கள்



**திரு.M.கலைச்செல்வன்**
துணைத் தலைவர்
வடசெட்டியந்தல்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திருமதி. S.இளவரசி சேகர்**
ஊராட்சி மன்ற
உறுப்பினர் ஐம்பை
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திருமதி.P.பரமேஸ்வரி**
ஊராட்சி மன்ற
உறுப்பினர் பரிக்கல்
உளுந்தூர்பேட்டை வட்டம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திருமதி.மகேஸ்வரி**
ஊராட்சி மன்ற
உறுப்பினர் ஐம்பை
திருக்கோவிலூர் வட்டம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திரு.த.மணிகண்டன்**
ஊராட்சி மன்ற உறுப்பினர்
மேலந்தல்
ரிஷிவந்தியம் ஒன்றியம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திருமதி. S.பாரதி**
ஊராட்சி மன்ற உறுப்பினர்
மாதவச்சேரி
சின்னசேலம் ஒன்றியம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திரு. ம.செல்வம்**
ஊராட்சி மன்ற உறுப்பினர்
தேவபாண்டலம்
சங்கராபுரம் ஒன்றியம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திரு.G.சதீஷ்குமார்**
ஊராட்சி மன்ற உறுப்பினர்
தேவபாண்டலம்
சங்கராபுரம் வட்டம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திரு.S.கார்த்திகேயன்**
ஊராட்சி மன்ற உறுப்பினர்
அ.பாண்டலம்
சங்கராபுரம் வட்டம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திரு. அ.கார்த்தி**
ஊராட்சி மன்ற உறுப்பினர்
பு.கோணகலவாடி
உளுந்தூர்பேட்டை வட்டம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திருமதி. D.தேவி**
ஊராட்சி மன்ற உறுப்பினர்
மாதவச்சேரி
சின்னசேலம் ஒன்றியம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



**திரு.A.ஜனார்த்தனன்**
ஊராட்சி மன்ற உறுப்பினர்
பரிக்கல்
உளுந்தூர்பேட்டை வட்டம்
கள்ளக்குறிச்சி மாவட்டம்



# பாராட்டுகிறோம்

கள்ளக்குறிச்சி மாவட்டம் மாதவச்சேரி கிராமத்தைச் சேர்ந்த செங்குந்த மகாஜன கிளைச் சங்கத் தலைவர் **திரு. அங்கமுத்து செங்குந்தர்** மகன் **திரு.அ.கதிரவன்** அவர்கள் ஈரோடு மாவட்டம் கவுந்தப்பாடியில் 28–11–2021) ஞாயிற்றுக்கிழமை அன்று நடந்த ஒப்பன் சவுத் இந்தியன்–2021 (டெட் பிப்ட் பஷ்அப் மென்ஸ் பிட்னஸ்) போட்டியில் கலந்து கொண்டு 3வது இடத்தைப் பிடித்துள்ளமைக்கு தென்னந்திய செங்குந்த மகாஜன சங்கம் சார்பில் வாழ்த்துக்களையும் பாராட்டையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

# வாழ்த்துக்கள்

தஞ்சாவூர் மாவட்டம் திருநாகேஸ்வரம் சன்னாபுரம் பகுதியை சார்ந்த தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் முன்னாள் தலைமைச் சங்க செயற்குழு உறுப்பினர் **திரு. சி. வைரவேல்** அவர்கள் தமிழ்நாடு கூட்டுறவு பட்டு உற்பத்தியாளர் இணையத்தில் துணைத்தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளமைக்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்களை தெரிவித்து கொள்கிறோம்.







# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

58 (பழைய எண்.89), அரண்மனைக்காரன் தெரு, சென்னை – 600 001
தொலைபேசி : 044 – 25226852

## தொழில் படிப்பு உதவித் தொகைக்கான விண்ணப்பப் படிவம்

**(அலுவலக உபயோகத்திற்கு மட்டும்)**

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் | : | வருடம் | : |
| வரிசை எண் | : | வகுப்பு | : |
| பதிவு எண் | : | மதிப்பெண் | : |

Degree / Diploma / I.T.I

**பாஸ்போர்ட் அளவு புகைப்படம்**

1. மாணவர் / மாணவி பெயர் :
2. தந்தை பெயர் முகவரி (பின்கோடுடன்) மற்றும் தொலைபேசி எண் :
3. சேர்ந்துள்ள தொழில் படிப்பு : Degree / Diploma
4. சேர்ந்துள்ள கல்லூரி பெயர் மற்றும் முகவரி :
5. கல்லூரியில் சேர்ந்த ஆண்டு :
6. படிப்பின் காலம் (ஆண்டு) :
7. தந்தையின் தொழில்/ ஆண்டு வருமானம் :

கீழ்க்கண்ட சான்றிதழ் நகல்கள் கண்டிப்பாக இணைக்கப்படவேண்டும்

8. வட்டாட்சியர் வழங்கிய வருமானச் சான்றிதழ் நகல் இணைக்கப்பட்டுள்ளதா? : ஆம் / இல்லை
9. மேற்படிப்பில் சேர கிடைத்த ஆணையின் நகல் இணைக்கப்பட்டுள்ளதா? : ஆம் / இல்லை
10. கல்லூரி கட்டண ரசீதின் நகல் இணைக்கப்பட்டுள்ளதா? : ஆம் / இல்லை
11. சாதிச் சான்றிதழ் நகல் இணைக்கப்பட்டுள்ளதா? : ஆம் / இல்லை
12. விடுதியில் தங்கிப் படித்தால் அதற்கான சான்று மற்றும் ரசீது இணைக்கப்பட்டுள்ளதா? : ஆம் / இல்லை
13. பள்ளி மாற்றுச் சான்றிதழ் (TC) நகல் இணைக்கப்பட்டுள்ளதா? : ஆம் / இல்லை

14. பத்தாம் வகுப்பு மற்றும் +2 தேர்வு மதிப்பெண் பட்டியல் நகல் இணைக்கப்பட்டுள்ளதா? : ஆம் / இல்லை

15. குடும்ப உறுப்பினர்களின் எண்ணிக்கை :

16. படித்துக்கொண்டிருப்போர் எண்ணிக்கை :

17. மாற்று திறனாளியாக இருந்தால் சான்றிதழ் :

18. படிப்புதவித் தொகை அனுப்ப வேண்டிய சரியான முகவரி :

19. வரைவோலை எடுக்கப்பட வேண்டிய வங்கியின் விபரம் :

20. மாணவரின் வங்கிக் கணக்கு எண் மற்றும் வங்கியின் பெயர், விபரம் :

தந்தையின் கையொப்பம் மாணவர்/மாணவி கையொப்பம்

மாவட்டச் சங்க நிர்வாகிகளில் இருவரின் பரிந்துரை மற்றும் மாவட்டச் சங்க முத்திரையுள்ள விண்ணப்பங்கள் மட்டுமே பரிசீலிக்கப்படும்

விண்ணப்பத்தில் குறிப்பிட்டுள்ள விவரங்கள் சரி என்று உறுதியளிக்கின்றேன்.

1. பெயர் : கையொப்பம் தேதியுடன் :
முகவரி : மாவட்ட சங்கத்தில் வகிக்கும் பதவி :

2. பெயர் : கையொப்பம் தேதியுடன் :
முகவரி : மாவட்ட சங்கத்தில் வகிக்கும் பதவி :

மேற்கண்ட விண்ணப்பத்தில் கேட்கப்பட்டுள்ள விவரங்கள் அனைத்தும் பூர்த்தி செய்யப்பட்டிருக்க வேண்டும் / நகல்கள் இணைக்கப்பட்டிருக்க வேண்டும்.

ஏதேனும் ஒரு விபரம் இல்லை என்றாலும் மாவட்டச் சங்க முத்திரை இல்லை என்றாலும் அந்த விண்ணப்பம் நிராகரிக்கப்படும்.

விண்ணப்பங்கள் அனுப்ப கடைசி தேதி: **31.01.2022** பிற்பகல் 5 மணி அதன் பின்னர் வரும் விண்ணப்பங்கள் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

85%க்குமேல் மதிப்பெண்கள் பெற்றவர்கள் மட்டும் விண்ணப்பிக்கவும்.

**விண்ணப்பங்கள் அனுப்ப வேண்டிய முகவரி:**

பொதுச் செயலாளர்,
தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்,
வள்ளல் சபாபதி மெட்ரிக் பள்ளி வளாகம், (பச்சையப்பன் கல்லூரி பின்புறம்),
25, ஆரிங்டன் சாலை, சென்னை – 600030. தொலைபேசி: 044 – 42957999

ஆயுள் உறுப்பினர் கட்டணம்: ரூ. 100

செங்குந்த மித்திரன் 15 ஆண்டு சந்தா: ரூ. 1000

## வங்கி கணக்கு விவரம்:

**South Indian Senguntha Mahajana Sangam**

SB A/c No : **020100050304358**
Bank : **Tamilnadu Mercantile Bank Limited**
Branch : George Town, Chennai - 600001
IFSC : **TMBL0000020**

அல்லது

**South Indian Senguntha Mahajana Sangam**

SB A/c No : **527402010002485**
Bank : **Union Bank of India**
Branch : Armenian Street Branch, Chennai
IFSC : **UBIN0552747**

**அல்லது எந்த வங்கியிலிருந்தும் மேற்கண்ட கணக்கின் பெயருக்கு DD எடுத்தும் அனுப்பலாம்.**

**பாவேந்தர் பாரதிதாசன் அறக்கட்டளை**
**Pavendar Bharathidasan Arakkattalai**

SB A/c No. : **420141716**
Bank : **Indian Bank**
Branch : MGT Branch, Thambu St, Chennai
IFSC : **IDIB000M002**


# செங்குந்த மித்திரன்

RNI No. TNTAM/2000/03982


செங்குந்த மித்திரன் சீரார் இதழ்வாழி
எங்குந்தன் பேர்பரப்பும் ஈடில்லாப் - பொங்குந்தன்
கூத்தர் குலம் வாழி! கோலத் தமிழ் வாழி!
ஏத்துநலம் வாழி இசைந்து

- வாரியார் சுவாமிகள்


**டிசம்பர் 2021 மலர்: 21 இதழ்: 12**

**ஆசிரியர்:**
**K.P.K.செல்வராஜ்**


**சந்தா விபரம்**

**தனி இதழ் : ரூ. 15/-**
**15 ஆண்டு சந்தா : ரூ. 1000/-**

**1-12-2020 முதல் புதிய விளம்பரக் கட்டண விபரம்**

**கலர்**

| | | |
|---|---|---|
| நடுப்பக்கம் | : | ரூ. 15,000 |
| முன் உள்அட்டை | : | ரூ. 10,000 |
| பின் அட்டை | : | ரூ. 10,000 |
| பின் உள்அட்டை | : | ரூ. 10,000 |
| முழுப்பக்கம் | : | ரூ. 5,000 |
| அரைப்பக்கம் | : | ரூ. 2,500 |
| கண்ணீர் அஞ்சலி (B&W) | | ரூ. 3,500 |


**தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்**
South Indian Senguntha Mahajana Sangam
எண்.58, (பு. எண்.89), அரண்மனைக்காரன் தெரு, சென்னை-600001.
தொலைபேசி : 044 - 25226852

நிர்வாக அலுவலகம் (கடிதம் & தொடர்புக்கு)
வள்ளல் சபாபதி மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி வளாகம் (பச்சையப்பன் கல்லூரி பின்புறம்), எண்.25, ஆரிங்டன் சாலை, சென்னை-600030.
**Phone: 044 - 42957999, 97911 17261**
E-mail: sengunthamithiran@gmail.com
http://www.sengunthamithiran.in




# செங்குந்தர் தோற்றம்

சூரபத்மனுடன் நடந்த போரில் முருகனுக்கு உதவ அவரது தாயாரான பார்வதி தேவியின் சிலம்பில் இருந்த ஒன்பது இரத்தினங்களிலிருந்து **1.வீரபாகு, 2.வீரகேசரி, 3.வீரமகேந்திரர், 4.வீரமகேஸ்வரர், 5.வீரபுராந்தகர், 6.வீரராக்கத்தர், 7.வீரமார்த்தாண்டர், 8.வீரரந்தகர் மற்றும் 9.வீரதீரர்** ஆகிய ஒன்பது வீரர்களை (நவவீரர்கள்) சிவபெருமான் உருவாக்கினார்.

முருகனின் படையில் சூரபத்ம அரக்கனைக் வீழ்த்த முதலில் ரத்தம் படிந்த குந்தத்தை ஏந்தி போருக்கு தலைமை ஏற்றனர் இந்த நவவீரர்கள். அரக்கனைக் கொன்ற பிறகு, போர்வீரர்கள் சிவனிடம் நெசவுத்தொழிலை ஏற்றுக்கொள்வதாகக் கூறினர், இது எந்தவொரு உயிரினத்தையும் அழிக்கவோ அல்லது காயப்படுத்தவோ சம்பந்தப்படாத தொழிலாக இருப்பதால், நெசவுத்தொழில் பயிற்சி பெற்றனர்.

மேற்கண்ட தளபதிகளில் ஒருவரான வீரபாகுவின் மகள் சித்திர வள்ளியை மன்னர் முசுகுந்த சோழன் மணந்தார். இந்த நவவீரர்கள் (ஒன்பது வீரர்கள்) மற்றும் முசுகுந்த சோழனின் சந்ததியரே செங்குந்தர் கைக்கோள முதலியாரின் முதல் தலைமுறை ஆகும்.

செங்குந்தர் கைக்கோள முதலியார்கள் தான் வீரபாகு உள்ளிட்ட நவவீரர்கள் வம்சம் என்று பல கல்வெட்டு, செப்பேடு, இலக்கிய ஆதாரங்கள் உள்ளது,

## 1. அலைவாய்மலை செப்பேடு

நாமக்கல் மாவட்டம், ராசிபுரம் வட்டம், பழந்தின்னிபட்டி கிராமத்தில் அலைவாய்கிரிமலை என்ற சிறு குன்று உள்ளது. இங்கு குகையீசுவரர் மடம் என்று செங்குந்தர் கைக்கோள முதலியார்களுக்கு பழமையான குலகுரு மடம் உள்ளது.

இந்த மடத்தில் உள்ள 700 வருடம் பழமை வாய்ந்த செப்பேடு ஒன்றில் "செங்குந்தர் கைக்கோள முதலியார்களின்" வீரம், ஈகை, பக்தியை பற்றி உள்ளது. மேலும் தமிழ் கடவுள் முருகனுக்கு உதவிய வீரபாகு உள்ளிட்ட நவவீரர்களின் வம்சம் நாம் தான் என்று சொல்கிறது.

(செப்பேடு அரசு தொல்லியல் துறையிடம் உள்ளது. மேலும் புலவர். ராசு எழுதிய "கொங்குநாட்டு சமுதாய ஆவணங்கள் என்ற புத்தகத்திலும் இந்த செப்பேட்டின் நகல் உள்ளது.)

## 2. நாவினால் மழுஎடுத்த ஞானப்பிரகாச செங்குந்தர் மயிலாடுதுறை செப்பேடு:

இந்த செப்பேடு 12ஆம் நூற்றாண்டில் நடந்த செய்தியைக் கூறுகிறது. தற்போது அரசு தொல்லியல் துறையிடம் உள்ளது.




31.5 x 21 செ.மீ அளவுள்ள இச்செப்பேட்டில் முன்பக்கம் 5 வரிசைகளாக புடைப்பு உருவங்கள் வார்க்கப்பட்டுள்ளன. பின்புறம் 45 வரிகளில் செப்பேட்டின் வாசகம் உள்ளது.புடைப்புச் சிற்பங்களில் முதல் வரிசையின் நடுவில் சிவபெருமான் உமையுடன் கயிலை மலையில் அமர்ந்துள்ள காட்சியும், அவரது இருபுறம் துவாரபாலர்கள், துவாரபாலகரை அடுத்து வலதுபுறம் வள்ளி தெய்வானையுடன் கூடிய முருகர், இடதுபுறம் விநாயகர் ஆகியோர் நின்ற நிலையில் காட்டப்பெற்றுள்ளனர். இரண்டாம் வரிசையில் 9 சக்திகள் (நவசக்திகள்) நின்ற நிலையில் கரண்ட மகுடம் அணிந்து கையில் மலரேந்திக் காட்டப்பட்டுள்ளனர். மூன்றாம் வரிசையில் 9 வீரர்கள் (நவவீரர்) வலக்கையில் வாள் ஏந்தி நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ளனர். நான்காம் வரிசையில் வாகு மாலையும், மகுடமில்லாத தலை ஒன்றும், இருபுறமும் இழுத்துக் கயிற்றால் கட்டப்பட்ட உறியின்கீழ் நெருப்பும், கயிற்றில் தொங்கும் வாள், வேல், வரிசையாகப் பறக்கும் நான்கு கொடிகள் ஆகியவையும் உள்ளன. ஐந்தாவது வரிசையான கீழ்வரிசையில் கொடி, சங்கு, கண்ணாடி, கவரிகள், துணி, விசிறி, உடுக்கை, எக்காளம், கதை, ஏரில் பூட்டப்பட்ட இரு காளைகள் ஆகியவை புடைப்புச் சிற்பங்களாக உள்ளன.

*கல்வெட்டு* இதழ் எண்.26; பிரமோதூத - வைகாசி (1990-மே) பக்.31-37 மற்றும் இதழ் எண்.27 பிரமோதூத - ஆவணி (1990-ஆகஸ்ட்) பக்.25-29ல் 'சமயச் செப்பேடு' என்ற தலைப்பில் வெளியானது. கட்டுரையாக எழுதியவர் திரு பொ. இராசேந்திரன், கல்வெட்டாய்வாளர்.

24 சமயமுதலி பட்டக்காரர் உள்ளிட்ட சமூகப் பெரியவர்கள் கூடிய கூட்டத்தில் தலைப்பலி(நவகண்டம்) செய்து கொண்ட சித்தர் முத்துக்குமாரசாமி முதலியார் தன் மகன் குப்பமுத்து முதலியார்க்கு ராஜாதிபதி மண்டல அதிபதி மடாதிபதி என்று பட்டம் சூட்டினார். செங்குந்தர்கள் மடத்திற்கு கொடுக்க வேண்டிய வரிகளை பற்றி கூறப்படுள்ளது.

இந்த செப்பேட்டிலும் செங்குந்தர் கைக்கோள முதலியார்கள் வீரபாகு உள்ளிட்ட நவவீரர்கள் வம்சம் என்று உள்ளது.

## 3. சேவூர் செப்பேடு:

17ஆம் நூற்றாண்டில் சேவூர் கச்சி அண்ணாமலை முதலியார் மகன் முத்துக்குமார நயினார் என்னும் சைவ மத சித்தர் கடவுளை வேண்டி நவகண்டம் செய்து கொண்டதாக பண்டைய கல்வெட்டுகள் கூறுகிறது

மைசூர் மகாராஜா முத்துக்குமாரசாமி சித்தரை நேரில் வந்து வணங்கி 1741ஆம் ஆண்டு முத்துக்குமாரசாமி மடத்திற்கு செம்பு பட்டயம் எழுதிக் கொடுத்தார்.

இந்த செப்பேட்டில் முதற்கண் செங்குந்தர் கைக்கோள முதலியார்களின் பெருமை, வீரம் மற்றும் இவர்களின் மூதாதையரான வீரபாகு நவவீரர்களைப் பற்றி தொகுத்துக் கூறப்பட்டது. கொங்கு

திருச்சேஞ்ஞலூர் சுத்த சைவாசாரியராகிய னாவினால் மழுவெடுத்த ஞானப்பிரகாச சுவாமியாரவர்களுக்கு பௌத்திர புத்திரர் ஆணுக்கேறாய்ப் பிறந்தோர், மெயிமீசையிருந்தோர், வீரர் பாணனென்றும், பொற்கோவில் கைக்கோளரென்றும், கொங்கெழுபத்து ரெண்டு நாட்டிலுள்ள செங்குந்தரனைவரும் பண்ணிக் கொடுத்த சமையச் செப்பேடு.

கந்தபுரானத்தில் கைக்கோளர் வரலாற்றின் பெருமையை மிருதியாயிப்பாடிப் பிரசங்கித்து னாவினால் வழுவெடுத்து அரங்கேற்றி நவவீரர் வம்சம் னிச்சயித்த சுவாமிகளுக்கு பரிசு கொடுத்துத் தீராதென்று யிரட்டை விளக்கு மிடக்கைப் பாவாடையிட்டு யெண்கால் பீடத்தெழுந்தருளச் செயிது பரிமள புட்பங்களால் பாதார்ச்சனை பண்ணி சாயிபோகமாயி தறிக் கொரு பணம், தலைக்கட்டுக் கொருபணம், நன்மைக் கொருபணம், தீம்மைக் கொருபணம், மூக்குத்திக் கொருபணம் யிந்த அஞ்சு பணமும் வருத்தனையாக யெந்த மண்டலத்திலுள்ள யெந்த கைக்கோள துரைகளும் பாவாடை வரிசை உபசாறஞ் செய்யவும்.

யிந்த செப்பேடு தள்ளி உதாசீனமும் ஆஷேபமுஞ் செய்யக்கூடாது. யிந்த கட்டளை சந்திராதித்தியருள்ள வரைக்குந் தப்பாது யிந்தக் கட்டளை தள்ளியுதாசீன யாக்ஷேபம் பண்ணின பேர்களுக்கு சிவசக்தி சண்முகன் பாதத்தாணை, சிவசமயஞ் செங்குந்த நாட்டாராணைப்படி மகா பாதகனாய் ரவராதி னரகங்களை யடைவார்களென்றுஞ் சத்தியமாய் யெழுபத்து ரெண்டுனாட்டிலுள்ள செங்குந்தரனவரு மேகாம்பரநாத சுவாமி சன்னிதானத்தில் நரைசிங்க ராயர் முன்பாக ஞானப்பிரகாச சுவாமியார் அவர்களுக்கு தாம்பூர சாசனம் பண்ணிக்கொடுத்தோம்.

இதர்க்கரியுஞ் சாதியார் சோழமண்டலத்திலுள்ள பூமி பாலகரும் வாதாவியைத் திறைகொண்ட வன்னியரு மிவர்களறிய பொது கையொப்பம். செங்குந்தம் உ கந்தவேள் துணை உ.

**மூலம்**

உ கணபதி துணை, சிவகிறுபை சண்முகன்துணை. சொஸ்திஸ்ரீ மன் மகாமண்டலேசுவர மூவராய கண்ட நரைசிங்கராயர் பிரிதிவிராஜிய பரிபாலநம் பண்ணி யருளாநின்ற சாலியவாகன சாகப்த்தம் 1107 கலியுகாப்த்தம் 4286 யிதில் மேல் செல்லாநின்ற விஜய வருஷம் பங்குனி மாதம் 2 தேதி குருவாரம் அசுவதி நக்ஷத்திரமும் சித்தயோகமும் சுபகரணமும் கூடிய சுபதினத்தில் ஸ்ரீ காஞ்சிபுரம் யேகாம்பரனாத சுவாமி சன்னிதியில் முகவாயிலெழுந்தான் மண்டபத்தில் செங்குந்தர் மற்றுள்ளாரும் கொறைவறக்கூடியிருந்து

### 4. சோழர் பூர்வ பட்டயம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கரிகால சோழன் கொங்கு மண்டலத்தில் செங்குந்த கைக்கோளர், வேளாளர், வைசிய செட்டியார் முதலிய குடிகளை குடியேற்றி 32 ஆலயங்கள் கட்டிய செய்தியை கூறும் ஆவணம் இந்த "சோழர் பூர்வ பட்டயம்". இந்த ஆவணத்தின் செங்குந்தர் கைக்கோள முதலியார்கள் வீரபாகு வம்சம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

### 5. திருப்பூர் மாவட்ட கைலாசநாதர் கோவில் நாயகியம்மன் கோவில் கல்வெட்டு.

திருப்பூர் வட்டம், அழகுமலை கைலாசநாதர் கோவில் பெரியநாயகியம்மன் கோவில் சன்னிதியில் உள்ள கல்வெட்டு.

இந்த கல்வெட்டு மதுரை திருமலை நாயக்கர் காலம் கி.பி. 1614 ஆம் வருடம் எழுதப்பட்டது.

இந்த கல்வெட்டில் வீரபாகு வம்சமான செங்குந்தர் கைக்கோள முதலியாரில் "சமய முதலி" கோத்திரம் / கூட்டம் பங்காளிகள்தான் இந்த அலகுமலை கோவில் குமாரர் (முருகன்) சன்னிதியில் சீர்பாதம் தாங்கும் உரிமை உள்ளது என்று அரசு அதிகாரம் செய்பவர்கள் உறுதி செய்து அளித்த ஆணை பற்றி கூறுவது இக்கல்வெட்டின் செய்தி.

### 6. திருச்செங்கோடு திருப்பணிமாலை

16ஆம் நூற்றாண்டில் எழுதிய திருச்செங்கோடு திருப்பணிமாலை என்னும் நூலில் திருச்செங்கோடு அர்த்தநாரீஸ்வரர் கோவிலில் செங்கோட்டுவேலர் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றை வீரவாகு குலம் என்ற செங்குந்தர் குலத்தை சேர்ந்த பெரியாள் என்பவர் கட்டினார் என உள்ளது. இந்த நூல் கன்னிமாரா நூலகத்தில் உள்ளது.

### 7. வீரபாகு தேவர் சமயச் செப்பேடு

பல நூற்றாண்டுகள் பழமையான இச்செப்பேடு புதுக்கோட்டை அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது.

இடம் — திருப்பூர் மாவட்டம், திருப்பூர் வட்டம், அலகுமலை கைலாசநாதர் கோயில் பெரிய நாயகியம்மன் கோயில் முன் குத்துக்கல்

காலம் — கி.பி 1641; மதுரை திருமலை நாயக்கர் காலம்

செய்தி — அலகுமலைக் குமரர் கோயிலில் சீர்பாதம் தாங்கும் உரிமை சமயமுதலிகள் ஆகிய வீரபாகுதேவர் காசாவர்க்கத்தார் ஆகிய செங்குந்த முதலியார்கட்கு உரியது என்று அரசு அதிகாரம் செய்பவர்கள் உறுதி செய்து அளித்த ஆணை.

**கல்வெட்டு**

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கலியுக சகார்த்தம்
3. நாலாயிரத்து எழுநூ
4. ற்றி நாற்பத்திரண்டு
5. க்கு மேல் செல்லா நின்
6. ற விக்கிரம வருஷம் ஆவ
7. ணி மாதம் 11 தியதி பொங்கலூர்
8. கா நாட்டில் அலுகுமலை குமா
9. ரர் திருவுளத்தினாலே சுவாமி
10. க்கு சீர்பாதம் தாங்குகிற சமை
11. ய முதலியளுக்கு சருவமானி
12. யமாக அலகுமலை குமார சுவா
13. மியார் திருவுளப்படிக்கு
14. வீரவாகு தேவர் காசாவர்க்
15. கத்திற்கு பட்டையங்
16. குடுத்தபடிக்குத் திருமலை
17. நாயக்கரய்யனவர்
18. கள் புண்ணியமாக கு
19. ருவப்பன் வெங்கடாத்
20. திரி அய்யன் வட்டமணி
21. அய்யன் திருவேங்
22. கடய்யன் கரணிக்கம்
23. சொக்கப்ப முதலியார்
24. பொங்கலூர்க்கா நாட்டார்
25. அனைவரும் சாட்சி இந்தப்
26. புண்ணிய தனாதி விலகின
27. வன் கெங்கைக் கரையி
28. ல் காராம் பசுவையு
29. ம் குருக்களையும் தன்
30. மாதாபிதாவையும்
31. கொண்ண பஞ்சமா பாதகனாக சந்திராதித்தவரைக்கும் அனுபவிப் பானாகவும்

காப்பாட்சியர் கோவிந்தராஜ் மற்றும் புலவர் ராசு இச்செப்பேட்டை நகல் எடுத்தனர்.

முருகப் பெருமானின் படை வீரர்களான நவவீரர்களில் மூத்தவரான வீரபாகு தேவருக்கு திருப்பணி பூஜை நடைபெற பல்வேறு தொழில் புரிவோர் அளித்த தர்மத்தை இச்செப்பேடு தெளிவாக விளக்குகிறது. மேலும் செங்குந்தர் கைக்கோளர் சமூகம் நாகரிக வம்சம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இச்செப்பேட்டில் நவவீரர்கள் ஒன்பது பேரின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளது.

### 8.நியாய ஓலை

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் சென்னை அலுவலகத்தில் இந்த ஓலைப்பட்டயம் உள்ளது.

பல நூற்றாண்டுக்கு முன்பு லிங்கனூர் கருப்ப முதலியார் என்பவரை சமூகத்தில் இருந்து தள்ளிவைத்தனர்.

மீண்டும் லிங்கனூர் கருப்ப முதலியார் சமூகத்தில் இணைவதற்காக செய்த முயற்சிகள் மற்றும் அவர் கொடுத்த வாக்குமூலங்கள் பற்றி இந்த ஓலைப்பாட்டயம் கூறுகிறது.

வாக்குமூலத்தில் "நான் நவவீரர்கள் வம்சம் தான் மேலும் ராக்கபாளையம் பெரியதனக்காரர் சின்னப்ப முதலி, நாட்டாண்மைக்காரர் மாரப்ப முதலியாரின் உறவினர்" என்று லிங்கனூர் கருப்ப முதலியார் கூறுகிறார்.

**செங்குந்த மித்திரன் வளர்ச்சி நிதி**

குஜராத் மாநிலம் அகமதாபாத்தில் வசிக்கும் **திரு. திருஞானசம்பந்தம்** தனது தாயாரின் நினைவை ஒட்டி **செங்குந்த மித்திரன் வளர்ச்சி நிதிக்கு ரூ.10,000/-** வழங்கியமைக்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்களைத் தெரிவித்தும் கொள்கிறோம்.

## வாழ்த்துகிறோம்!



ஈரோட்டில் பொது மற்றும் சமூக சேவையாற்றியமைக்காக கனடா நாட்டின் பிராம்டன் இன்டர்நேஷனல் யுனிவர்சிட்டி, ஈரோடு பாரதியார் சமூக கலாச்சார அகாடமி ஆகியவை இணைந்து தொழிலதிபரும், மாநில வர்த்தகர் அணியின் அமைப்பாளருமான திரு. K.N.நந்தகோபால் செங்குந்தர் அவர்களுக்கு கவுரவ டாக்டர், சேவா ரத்னா விருது வழங்கப்பட்டது. விருது பெற்றமைக்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்களைத் தெரிவித்தும் கொள்கிறோம்.




திருப்பூர் மாவட்டம் காங்கயம் சுகுணா சிக்கன் **ராஜா (எ) திரு.S.விஜய சந்திர கணேஷ் செங்குந்தர் - தெய்வத்திரு. கௌசல்யாதேவி** ஆகியோரின் மகளும், ஈரோடு மாவட்டம் பெரியவலசு **திரு. S.G.அம்பலவாணன் - திருமதி A.உமா மகேஸ்வரி** அவர்களின் மருமகளும் **திரு. A.சைலேஸ்வர்** அவர்களின் மனைவியுமான **திருமதி S.V.சுபாஷினி** அவர்கள் தமிழ்நாடு டாக்டர் எம்.ஜி.ஆர் மருத்துவப் பல்கலைக்கழகத்தில் முதுநிலை பல் மருத்துவத்தில், ஈறு சிகிச்சைப் பிரிவில் தங்கப்பதக்கம் பெற்றமைக்கு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் சார்பில் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.





## பாராட்டுகிறோம்

மிகக் குறுகிய நாட்களில் தன்னார்வத்துடன் செயல்பட்டு வேலூர் மாவட்ட தலைமைச் சங்க செயற்குழு உறுப்பினர், ஆசிரியர் **திரு.E.லோகநாதன்** 66 செங்குந்த மித்திரன் இதழ் சந்தாக்களை 60 நாட்களுக்குள் சேர்த்து சாதித்துள்ளார். அண்ணாருக்கு தலைமைச் சங்கத்தின் சார்பாக பாராட்டுதல்களையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.



M.P. நாச்சிமுத்து M. ஜெகநாதன்
பொறியியல் கல்லூரி
சுத்தானந்தன் கல்வி நகர்,
சென்னிமலை, ஈரோடு - 638 112.
Phone : 04294 - 250242, 250220, 251617
E-mail : mpnmjec@mpnmjec.ac.in Visit us at : www.mpnmjec.ac.in
Counselling Code
2713
'உத்யோக் ரத்னா'
திரு. ஜெ. சுத்தானந்தன் B.Sc.
நிறுவனர்
'பாரத் வித்யா சிரோமணி'
Dr. வசந்தா சுத்தானந்தன் M.A., B.Ed.
தாளாளர்
B.E.
Civil Engineering
Computer Science Engineering
Electronics and Communication Engineering
Electrical and Electronics Engineering
Mechanical Engineering
கல்விச் சேவையில் 35 வருடங்கள்
MPNMJEC
B.Tech. I.T.
M.E.
CAD / CAM
Computer Science and Engineering
Power Systems Engineering
Structural Engineering
VLSI - Design
M.B.A
M.C.A
தொடர்புக்கு :
98652 33600
98655 33800
98655 33700
73736 44088
Placement Record
394
Offers

# மணமகன் தேவை

NAME: **V.THANGAMANI @ DIVYA**

DATE OF BIRTH : 30.07.1992 @ 8.00 PM

STAR : Ayilyam 3rd Paadham

RASI/ LAKANAM : Kadagam / Kumbam

HEIGHT : 144 CM



CASTE : Sengunthar Mudaliyar

NATIVE : Thirukazhukundram

QUALIFICATION: B.E (ECE)., M.B.A

JOB PROFILE : ADMINISTRATIVE OFFICER @ PRIVATE SCHOOL

MONTHLY SALARY : 12,000/M

MOTHER'S NAME : R.VITHYA

BLOOD RELATION : 1 - Elder Brother - (Searching Aliance)

RESIDENTIAL ADDRESS:
M.RATHINAVELU (Grand Father)
No: B-143/15, 8th Cross Street,
Annanagar, Chengalpattu – 603001.

Contact Details : Mother : **96298 55168**
Brother : **97915 47250**

Expectation : Well educated with good attitude. Nice family background. Be in job.

| | | | |
|---|---|---|---|
| | | செ | கே |
| ல | இராசி | | சூ சந் பு சு |
| சனி | | | கு |
| ரா | | | |

| | | | |
|---|---|---|---|
| செ சு | | ரா | |
| சந் | நவாம்சம் | | சனி |
| | | | |
| பு | ல கே சூ | கு | |

02/20748

புதன் திசை இருப்பு 6 வருடம் 8 மாதம் 14 நாள்

பெயர் : **வீ. சுவீதா**

படிப்பு : B.E. (C.S.E)

பிறந்த தேதி : 20-05-1997, 12:10 AM

நட்சத்திரம் : சித்திரை

ராசி / லக்னம்: துலாம் / மகரம்



பணி : DEXRA SOLUTIONS, Guindy, Chennai.

வருமானம் : ரூ. 5,40,000/ வருடம்

தாயார் பெயர் : M.சுகந்தி, (Tailor & Parlour Shop)

உடன்பிறந்தோர் : இல்லை (ஒரே மகள்)

முகவரி: Flat No.: F3, Rahul Flats,
Rahul Street, Emmanvel Nagar,
Pudur, Ambattur, Chennai - 53.

சொந்த ஊர் : பாவடித்தோப்பு தெரு,
பழஞ்சநல்லூர்,
காட்டுமன்னார் கோவில்,
கடலூர் மாவட்டம்.

செல் : **99765 54450, 91767 09306**

Age Difference : 5 Years

எதிர்பார்ப்பு : B.E., MBA., MCA., Master Degree, நல்ல உத்தியோகம்.

| | | | |
|---|---|---|---|
| கே சனி | பு | சூ சு | |
| | இராசி | | |
| ல கு | | | செ |
| | | சந் | ரா |

| | | | |
|---|---|---|---|
| | | சு | |
| சூ | நவாம்சம் | | கே |
| ரா | | | பு |
| | செ சனி சந் | | ல கு |

02/20726 /09.11.2021

செவ்வாய் திசை இருப்பு 1 வருடம் 5 மாதம் 5 நாள்

# மணமகன் தேவை

பெயர் : **P.குழலி**

பிறந்த தேதி :15.12.1996, தாது வருடம் கார்த்திகை மாதம் 30ம் தேதி ஞாயிற்றுக்கிழமை காலை 9.00 மணி



நட்சத்திரம் : அவிட்டம் 2ம் பாதம்

இராசி/லக்னம் : மகரம்/ மகரம்

கல்வித் தகுதி : B.Tech(IT),

வேலை : EXECUTIVE, CMA CGM CHENNAI

நிறம்/உயரம்/எடை : நல்ல சிவப்பு/ 157 செ.மீ/ 50 kg

இனம் : செங்குந்தர் கைக்கோளர்

தந்தை : A. பசுபதி Viji Engineering Consultancy & Contracting

தாய் : P.சாந்தி, வெஸ்டர்ன் யூனியன் மணி டிரான்ஸ்பர்.

உடன்பிறப்புகள் : அக்கா 2
P.சுதா B.F(Aero Engg) MBA
கணவர் கிருஷ்ணன் BE அபுதாபி
P.லதா B.Tech(petroleum Engg) MBA
கணவர் K.அமிர்தமுருகன் BE MBA (IBM) சென்னை

சொத்து விபரம் : அடுக்கு மாடி வீடுகள், விவசாய நிலம், காலி மனைகள்

முகவரி : சாந்தி ரெசிடென்சி வண்டிக்கார தெரு, வதிஷ்டபுரம், திட்டக்குடி வட்டம், கடலூர் மாவட்டம் - 606106.

செல் & வாட்ஸ்அப் : **94435 39590**

எதிர்பார்ப்பு : பட்டப்படிப்புடன் பணியில் உள்ள நல்ல குடும்பப் பின்னணியுடன் வரன் தேவை.

| | | | |
|---|---|---|---|
| கே | | | |
| சனி | இராசி | | |
| ல / சந் | | | செ |
| கு பு | சு சூ | | ரா |

| | | | |
|---|---|---|---|
| சூ ரா | ல | | சனி (வ.நி.) |
| | நவாம்சம் | | சு பு |
| | | | |
| கு செ | | | சந் கே |

06/20758 /07.12.2021

செவ்வாய் திசை இருப்பு 4 வருடம் 9 மாதம் 15 நாள்

பெயர் : **C.பூம்பாவை** (மறுமணம்)

படிப்பு : M.Sc., HRD Psychology

பிறந்த தேதி : 25.02.1992, இரவு 10.25 (செவ்வாய்), கும்பகோணம்



நட்சத்திரம் : அனுஷம் 4ஆம் பாதம்

ராசி, லக்னம் : விருச்சிகம், துலாம்

நிறம், உயரம் : சிவப்பு, 161 செ.மீ. (5 அடி 4 அங்குலம்)

தந்தை பெயர் : K.சிதம்பரம், மூத்த கணக்கு அதிகாரி (ஓய்வு), சென்னை குடிநீர்

தாயார் பெயர் : S.அம்புஜம், அரசு ஆசிரியை (ஓய்வு)

உடன் பிறந்தோர் : அண்ணன் 1 C.திருமலர், தலைமை தொழிலாளர் நல ஆய்வாளர், தென்னக ரெயில்வே (திருமணமானவர்)

முகவரி : 48/1A, 8வது பிரதான சாலை, திருவள்ளுவர் நகர், கொடுங்கையூர், சென்னை-118

செல் : K.சிதம்பரம் - **95001 15070,**
S.அம்புஜம் - **96000 71740**

சொத்து விபரம் : மணமகளின் பெயரில் மாதம் ரூ.30,000 வாடகை வரக்கூடிய வீடு சென்னையில் உள்ளது.

எதிர்பார்ப்பு : கல்வித்தகுதி : Any Degree,
உயரம் : 165 செ.மீ.,& above,
பணி : அரசு/தனியார் (சென்னையில் பணிபுரிபவர் மட்டும்)

| | | | |
|---|---|---|---|
| | | | கே |
| சூ பு | இராசி | | |
| சு செ சனி | | | கு |
| ரா | சந் | ல | |

| | | | |
|---|---|---|---|
| | செ சனி | ல சு | பு |
| | நவாம்சம் | | ரா |
| சூ கே | | | |
| | சந் | | கு |

08/20762

சனி திசை இருப்பு 2 வருடம் 9 மாதம் 16 நாள்

# மணமகன் தேவை

Name : **RAJA RAJESHWARI**
Education : B.Tech., M.S., USA Data Science
Date of Birth : 11.09.1991, 7:45 PM, Pattukkottai.
நட்சத்திரம் : சித்திரை 4ம் பாதம்
செவ்வாய் தோஷம் உள்ளது.
ராசி /லக்னம் : துலாம் ராசி / மீனம் லக்னம்



Caste : Sengunthar Kaikola Mudaliar
Gothram : Siva Gothram
Height/Weight/Colour : 5'.2" / 65 Kgs /Fair
Job : Data Scientist, USA
Salary : USD $ 80,000 /Annum
Father's Name : R.D.Premkumar, B.E., Civil (Retired)
Mother's Name : Vanmathi Premkumar (House Wife)
Brother's Name : R.P. Harikumar (Elder - Un Married)
Address : 6A, Archana Nagar, New Perungalathur, (Own House), Chennai - 600 063.
Contact : **92046 57704, 89875 73020**
E-mail : rdpkumar323@gmail.com
Expectations : Groom working in USA or Canada

| ல | | | கே |
|---|---|---|---|
| | இராசி | | சு(வ்) |
| சனி(வ்) | | | சூ பு கு |
| ரா | | சந் | செ |

| சு சனி | செ கே | கு | பு |
|---|---|---|---|
| | நவாம்சம் | | |
| | | | |
| | சூ சந் | ரா | |

09/20763 /10.12.2021

செவ்வாய் திசை இருப்பு 0 வருடம் 11 மாதம் 0 நாள்

பெயர் : **க. கிருத்திகா**
படிப்பு : PhD.,
பிறந்த தேதி : 22.08.1990 பிரமோதூத வருடம் ஆவணி மாதம் 6ஆம் தேதி புதன் கிழமை காலை 10:10 AM செங்குந்தபுரம், அரியலூர்.



நட்சத்திரம் : பூரம்
ராசி/லக்னம் : சிம்மம் ராசி / துலாம் லக்னம்
நிறம்/எடை/உயரம் : மாநிறம் / 50Kg./165CM
தந்தை பெயர் : R.கந்தசாமி (பணி ஓய்வு)
தாயார் பெயர் : வாசுகி (பணி ஓய்வு)
உடன்பிறந்தவர்கள்: மூத்த சகோதரர் -1
முகவரி : 2, 4வது குறுக்குத் தெரு, செங்குந்த புரம் & போஸ்ட், ஜெயங்கொண்டம், உடையார்பாளையம் வட்டம், அரியலூர் மாவட்டம். 621802
மின்னஞ்சல் : kanda_kar8@yahoo.com
கைபேசி : **93400 24415**
சொத்து விபரம் : 2 வீடு, நிலம்
குறிப்பு : 8ல் செவ்வாய்
எதிர்பார்ப்பு : Master Degree படித்த, பணியில் உள்ள நல்ல வரன் தேவை,

| | | செ | |
|---|---|---|---|
| | இராசி | | கு சு கே |
| ரா | | | சூ சந் பு |
| சனி | | ல | |

| | ரா | சூ | பு |
|---|---|---|---|
| | நவாம்சம் | | |
| செ | | | |
| | ல சந் சு | கே | கு சனி |

14/20774 /15.12.2021

சுக்கிர திசை இருப்பு 2 வருடம் 9 மாதம் 23 நாள்

# மணமகன் தேவை

பெயர் : **N. மஞ்சு பிரியா**

படிப்பு : ME., (Power System Engineering)

பிறந்த தேதி : 08.10.1996 செவ்வாய்க்கிழமை புரட்டாசி 22ம் தேதி பகல் 1:50 PM ஆம்பூர்

நட்சத்திரம் : மகம் 2ம் பாதம்

ராசி / லக்னம்: சிம்மம் ராசி / மகரம் லக்னம்

நிறம்/எடை/உயரம் : வெள்ளை /55 Kg / 5.4 feet

தந்தை பெயர் : S. நேரு (லேட்) ஆட்டோ ஓட்டுநர்

தாயார் பெயர் : N. தேவி

உடன்பிறந்தவர் : இளைய சகோதரி 1

முகவரி : 10B, கஸ்தூரிபாய் தெரு,
காந்திபேட்டை,
திருப்பத்தூர் - 635601

கைபேசி : **95976 53243, 73053 01350**

மின்னஞ்சல்: manjudhana1996@gmail.com

சொத்து விபரம் : சொந்த மாடி வீடு மற்றும் 2 வீடு வாடகைக்கு விடப்பட்டுள்ளது.

எதிர்பார்ப்பு : பட்டப்படிப்பு படித்த அரசு /தனியார் / சுயதொழில் புரியும் வரன் தேவை.
3 - 4 வயது வித்தியாசம்

| | | | |
|---|---|---|---|
| சனி(வ) கே | | | |
| | இராசி | | செ |
| ல / மா | | | சந் சு |
| கு | | | சூ பு ரா |

| | | | |
|---|---|---|---|
| மா | ல | சந் ரா | |
| செ பு | நவாம்சம் | | சூ சு |
| | | | கு |
| | கே | | சனி(வ) |

11/20768 /11.12.2021

பெயர் : **அமிர்தா. கு**

படிப்பு : B.E.,(ECE)



பிறந்த தேதி : 08.12.1998 கார்த்திகை மாதம் 22ம் தேதி செவ்வாய்க்கிழமை பகல் 12:10 வேலூர்

நட்சத்திரம் : ஆயில்யம் 2ம் பாதம்

ராசி / லக்னம்: கடகம் ராசி / கும்பம் லக்னம்

பூர்வீகம் : திருவண்ணாமலை

பணி : Engineer (Aspire Systems Pvt. Ltd)

வருமானம் : Rs. 2.85 PA

நிறம் / எடை/உயரம் : சிகப்பு / 53Kg. /155CM

தந்தை பெயர் : C.குமார் (NLC Retd Exe Eng)

தாயார் பெயர் : கு.தாமரை செல்வி, இல்லத்தரசி

உடன்பிறந்தவர் : மூத்த சகோதரர்கள் 2 (திருமணமானவர்கள்)

முகவரி : 1/229A, தாமரை இல்லம்,
லீலாவதி நகர், சிக்கராயபுரம்,
சென்னை - 600069,

கைபேசி : **94429 10348**

மின்னஞ்சல் : arun.ney@gmail.com

எதிர்பார்ப்பு : BE., Any Degree, IT Field, Govt Job, Private Job

| | | | |
|---|---|---|---|
| சனி(வ) | | | |
| ல / கு கே | இராசி | | சந் |
| | | | ரா |
| சு(அ) | சூ பு | | செ |

| | | | |
|---|---|---|---|
| ல | செ சு ரா | கு (வ.நி) | |
| சனி(வ) | நவாம்சம் | | பு (வ.நி) |
| சூ சந் | | | |
| | | கே | |

புதன் பகவான் மகாதிசை இருப்பு வருடம் 12-01-25-47

12/20770 /13.12.2021

# மணமகன் தேவை

பெயர் : **மா.கவிதா**

படிப்பு : B.D.S., (SRM University)



பிறந்த தேதி : 06.09-1998
ஞாயிறு 1174 ஆவணி 21ம்
தேதி பகல் 3:20 மணி
புளியங்குடி, தென்காசி

நட்சத்திரம் : சதயம்
4ம் பாதம்

ராசி / லக்னம்:
கும்பம் ராசி / மகரம் லக்னம்

நிறம்/எடை/உயரம் : மாநிறம்/58Kg/156CM

தந்தை பெயர் : ப. மாணிக்கம், ஆசிரியர்

தாயார் பெயர் : மு.விஜயலெட்சுமி, ஆசிரியை

உடன்பிறந்தோர் : மூத்த சகோதரர் - 1

முகவரி : 49, சுந்தர விநாயகர் கோவில் தெரு,
தி.நா.புதுக்குடி, புளியங்குடி,
கடையநல்லூர் (TK),
தென்காசி மாவட்டம். - 627855

கைபேசி : **98421 22065**

மின்னஞ்சல் : balamuruganbalu11@gmail.com

எதிர்பார்ப்பு : BDS, MBBS, அரசு மற்றும் வங்கிப் பணியில் உள்ள வரன்.

| | | | |
|---|---|---|---|
| கு | சனி | | |
| சந் கே | இராசி | | செ |
| ல / மா | | | சூ பு சு ரா |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| சந் | சனி(வ) | சு ரா | |
| | நவாம்சம் | | பு கு(வ) |
| ல / மா | | | |
| | செ கே | | சூ |

13/20771/13.12.21

ராகு திசை இருப்பு 2 ஆண்டு 6 மாதம் 17 நாள்

பெயர் : **த.மலர்விழி**

படிப்பு : B.E., (ECE),



பிறந்த தேதி : 10.4.1995
திங்கட்கிழமை காலை 9.03
மணி, பவ வருடம் பங்குனி
மாதம் 27-ம் தேதி

நட்சத்திரம் : ஆயில்யம்

ராசி /லக்னம் : கடகம் ராசி
/ ரிஷபம் லக்னம்

நிறம், உயரம் : சிகப்பு, 165 செ.மீ

பணி : ACCENTURE, Chennai

வருமானம் : 10,00,000 /- வருடம்

இனம் : செங்குந்தர்

தந்தை பெயர் : வ. தட்சணாமூர்த்தி, B.A.,
(ஆவின் பணி ஓய்வு)

தாயார் பெயர் : த.கன்னிபாய் இல்லத்தரசி

உடன் பிறந்தவர் : தங்கை - 1, B.Sc., P.A.

முகவரி : 24/A, முல்லை தெரு, கம்பன் நகர்,
மாதவரம் பால் பண்ணை, சென்னை -51.

பூர்வீகம் : கலவை, இராணிப்பேட்டை மாவட்டம்

செல் : **94449 17387**
**87544 75039** (வாட்ஸ் அப்)

| | | | |
|---|---|---|---|
| சூ | பு கே | ல | |
| சு சனி | இராசி | | சந் செ |
| | | | |
| | கு | ரா | |

| | | | |
|---|---|---|---|
| சனி | பு சு | ல | |
| சூ | நவாம்சம் | | கே |
| கு ரா | | | |
| சந் செ | | | |

15/20780 /15.12.2021

# மணமகன் தேவை

பெயர் : **C. பார்கவி**

பிறந்த தேதி : 18.10.1996 வெள்ளி தாது வருடம் ஐப்பசி மாதம் 02ம் தேதி 11:29 PM சென்னை



நட்சத்திரம் : பூராடம் 2

ராசி / லக்னம்: தனுசு ராசி / மிதுனம் லக்னம்

நிறம்/உயரம் : சிகப்பு / 5.5 Feet

படிப்பு : B.B.A., LLB (Hon) ML

வருமானம் : ரூ. 50,000/மாதம்

தந்தை பெயர் : K.சிட்டிபாபு, Chennai Port Trust

தாயார் பெயர் : M.கலைச்செல்வி, Sub Inspector of Police, Chennai.

உடன்பிறந்தவர்கள்: மூத்த சகோதரி 1 (திருமணமானவர்)

முகவரி : நெ. 18/1, கிழக்கு மாட வீதி, திருவான்மியூர், சென்னை - 600041.

மின்னஞ்சல் : parkavi0203@gmail.com

தொடர்பு முகவரி : நெ.26-C, போலீஸ் குவார்ட்டர்ஸ், திருவான்மியூர், சென்னை - 600041,

கைபேசி : **70103 18821, 98411 34157**

எதிர்பார்ப்பு : L.L.B. (or) Any Degree படித்த நல்ல வரன் தேவை.

| | | | |
|---|---|---|---|
| சனி கே | | | ல |
| | இராசி | | செ மா |
| | | | சு |
| சந் கு | | சூ | பு ரா |

| | | | |
|---|---|---|---|
| செ | ரா | | ல |
| | நவாம்சம் | | பு |
| | | | |
| மா | சு | சூ கே | சந் கு சனி |

16/20779 /15.12.2021

சுக்கிர திசை இருப்பு 11 வருடம் 9 மாதம் 30 நாள்

பெயர் : **கா. கீர்த்தனா**

பிறந்த தேதி : 30.07.1996 பகல் 3.10 மணி, தாது ஆண்டு ஆடி மாதம் 15ஆம் தேதி.



படிப்பு : B.E.,MBA.,

நட்சத்திரம் : திருவோணம் 1ஆம் பாதம்

ராசி : மகரம்

லக்னம் : விருச்சிகம்

நிறம் / உயரம் : சிவப்பு / 167CM

இனம் : செங்குந்தர்

தந்தை பெயர் : பா. கார்த்திகேயன்

வேலை : வியாபாரம், மளிகை

தாயார் பெயர் : கா. சுகுணா (இல்லத்தரசி)

உடன் பிறந்தோர் : தம்பி - 1 B.Com III year

முகவரி : எண் 74, ஓமாம்புலியூர் ரோடு, காட்டுமன்னார் கோயில், கடலூர் மாவட்டம் - 608301.

போன் : **98941 20079, 98943 56739, 94434 19522.**

| | | | |
|---|---|---|---|
| சனி கே | | | செ சு |
| | இராசி | | சூ |
| சந் | | | பு |
| கு | ல | | ரா |

| | | | |
|---|---|---|---|
| | சந் | பு ரா | |
| | நவாம்சம் | | |
| | | | ல சனி |
| செ | சூ கே | சு | கு |

17/20782 /17.12.2021

சந்திர திசை இருப்பு 1 வருடம் 6 மாதம் 4 நாள்

## மணமகன் தேவை

பெயர் : **N.யமுனா**

பிறந்த தேதி : 20.07.1994 (AM 3.42)

மங்களகரமான பவ வருடம் ஆடி மாதம் (03ஆம் தேதி 20.07.1994) செவ்வாய் கிழமை பின்இரவு 3.42. மணிக்கு சுப ஜெனனம்.



படிப்பு : MSc.,MPhil(C.S).,

நிறம் /உயரம்: மாநிறம் / 165செமீ

ராசி/லக்னம்: விருச்சிகம் ராசி / மிதுனம் லக்னம்

நட்சத்திரம் : கேட்டை 3-ம் பாதம்

இனம் : செங்குந்தர்

தந்தை பெயர் : M.நடனம் (எ) நடராஜன் செங்குந்தர் (நகை அடகுகடை / விவசாயம்)

தாய் பெயர்: N.புவனேஸ்வரி - குடும்ப பணி

உடன்பிறப்பு : தங்கை 1 தம்பி 1

நிரந்தர முகவரி : எண்.24 புதுசுப்ரமணிய சுவாமி கோவில் தெரு, குறிஞ்சிப்பாடி-607302 கடலூர் மாவட்டம்

தொடர்புக்கு: **99425 67257,** (Whatsapp no.)
**99444 41019** (Whatsapp no.)

எதிர்பார்ப்பு: அரசு பணி (அ) வங்கிபணி Software Engineer, வரனுக்கு சமமான படிப்பு

| | | | |
|---|---|---|---|
| | கே | செ | ல / பு |
| சனி | இராசி | | சூ |
| | | | சு |
| | சந் | கு ரா | |

| | | | |
|---|---|---|---|
| | பு | ரா | செ |
| சந் கு | நவாம்சம் | | சூ |
| | | | சு |
| சனி | கே | ல | |

19/

புதன் திசை இருப்பு 6 வருடம் 4 மாதம் 5 நாள்




**செங்குந்த மித்திரன்**

## மாத இதழில் விளம்பரம் செய்யுங்கள்!

உங்கள் இல்லத் திருமண விழா, காதணி விழா, புதுமனை புகுவிழா, பிறந்த நாள் விழா போன்ற சுபநிகழ்ச்சிகளை செங்குந்த மித்திரன் இதழில் விளம்பரமாக வெளியிடலாம்.

| | |
|---|---|
| முழுப்பக்கம் (கலர்) (140mm X 200mm) | - ரூ. 5,000 |
| அரைப்பக்கம் (கலர்) (140mm X 100mm) | - ரூ. 2,500 |
| கண்ணீர் அஞ்சலி முழுப்பக்கம் (B&W) | - ரூ. 3,500 |

மேலும் விபரங்களுக்கு தலைமைச் சங்க அலுவலகத்தை தொடர்பு கொள்ளவும்.

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் மாவட்ட கிளைச் சங்கங்கள் நடத்தும் திருமணத் தகவல் மையத்தின் விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன. தனி நபர்கள் நடத்தும் திருமணத் தகவல் மையத்தின் விளம்பரத்திற்கு அனுமதி இல்லை.

# திருமண விழா நன்கொடையாக தலைமைச் சங்கத்திற்கும் செங்குந்தர் மாளிகைக்கும் மின்னொளிப் பெயர்பலகை







மதுரை மாவட்ட செங்குந்த மகாஜன சங்க பொதுச் செயலாளர் B.ரவீந்திரன் அவர்களது மகன் R.விவேக்ஆனந்த் – VA.திவ்யா திருமணத்தை முன்னிட்டு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர் ‘கைத்தறிக் கதிரவன்’ K.P.K.செல்வராஜ், பொதுச்செயலாளர் R.P.குமரகுருபரன், பொருளாளர் R.காந்தி ஆகியோர்களின் வேண்டுகோளை ஏற்று சென்னை செங்குந்தர் மாளிகைக்கு புதிய LED போர்டு ஒன்றும் 10'x3'–ல் ஒரு குளோசைன் போர்டும் ரூ.36,000/– தன் சொந்த செலவில் செய்து பொறுத்திக் கொடுத்துள்ளார்.






மதுரை மாவட்ட செங்குந்த மகாஜன சங்கப் பொதுச்செயலாளர் B.ரவீந்திரன் செங்குந்தர் – அங்குலெட்சுமி அவர்களின் மகன் R.விவேக்ஆனந்த் மதுரை தல்லாகுளம் V.விஜயக்குமார் செங்குந்தர் – மல்லிகா அவர்களின் மகள் VA.திவ்யா ஆகியோருக்கு 10.12.2021 வெள்ளிக்கிழமை அன்று நடைபெற்ற திருமண விழா தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர் "கைத்தறிக் கதிரவன்" K.P.K.செல்வராஜ் அவர்களின் தலைமையிலும், பொதுச் செயலாளர் R.B.குமரகுருபரன் அவர்களின் முன்னிலையிலும் சிறப்பாக நடைபெற்றது.

இவ்விழாவில் மாநிலத் துணைச் செயலாளர் திருவண்ணாமலை சீனி கார்த்திகேயன், திண்டுக்கல் மாவட்டம் செங்குந்த மகாஜன சங்க தலைவர் V.தண்டபாணி, மதுரை மாவட்ட செங்குந்த மகாஜன சங்க பொருளாளர் P.திருநாவுக்கரசு, மாநில செயற்குழு உறுப்பினர்கள் N.உதயகுமார், டாக்டர். K.முத்துவேல், S. ஆண்டியப்பன், நியமன செயற்குழு உறுப்பினர் K.கந்தசாமி ஆகியோரும், மதுரை மாவட்ட செங்குந்த மகாஜன சங்க துணைத் தலைவர்கள் N.S.வடிவேல், A.ராமசுப்பிரமணி, A.ராஜமாணிக்கம், S.சௌந்தர்ராஜன், மாவட்ட துணை செயலாளர்கள் K.காளிமுத்து, C.தெய்வேந்திரன், R.G.ரமேஷ், மாவட்ட செயற்குழு உறுப்பினர்கள், தணிக்கையாளர்கள் A.சுப்பிரமணி, V.ஆறுமுகம் மற்றும் மதுரை மாவட்ட செங்குந்த உறவின்முறை நாட்டாண்மைகாரர்கள், அம்பலக்காரர்கள், உறவின்முறை தலைவர்கள், உறவின்முறை செயலாளர்கள், செயற்குழு உறுப்பினர்கள் உள்ளிட்ட செங்குந்த சொந்தங்கள் கலந்து கொண்டனர். விழாவில் அனைவருக்கும் மரக்கன்றுகள் அன்பளிப்பாக வழங்கப்பட்டது.

## பிறந்த நாள் வாழ்த்துக்கள்

**டிசம்பர் 19**



**ஆ.சக்திகுமரன்**

பெற்றோர் :

**K.ஆனந்தராஜ்**

**K.கார்த்திகா**

செய்யாறு

**ஜனவரி 1**



**A.ஆத்யா**

பெற்றோர் :

**G.அருண்சக்திவேல்**

**தீபிகா**

இலண்டன்

## அம்பிகையை சரணடைந்தால் அதிக வரம் பெறலாம்

திருமதி. அன்னக்கொடி காந்தி
மதுரை

### பாடல்–30

***அன்றே தடுத்தென்னை ஆண்டு கொண்டாய் கொண்டதல்ல தென்கை
நன்றே உனக்கு இனிநான் என்செயினும் நடுக்கடலுள்
சென்றே வீழினும் கரையேற்றுகை நின் திருவுளமே
ஒன்றே, பல உருவே, என் உமையவளே***

அபிராமி தாயே! என்று என் புத்தியில் உன் உணர்வு எனக்கு ஏற்பட்ட அந்த நாளிலேயே, மாயையில் விழாவண்ணம் அடியேன் தவறு செய்யாமல் தடுத்து அடியேனுக்கு அருள் செய்து விட்டாய். இப்போது அப்படி ஆட்கொள்ளவில்லை என மறுப்பது உனக்கு நியாயமாகுமா? இதற்கு மேல் அடியேன், என்ன பிழை செய்தாலும் அடியேன் கடல் நடுவே வலியச் சென்று விழுந்தாலும் காப்பாற்றி அருள்வது உனது திருஉளச் செயலாகும். இனி எனக்கு என்ன கவலை? ஒன்றேயான பரப்ரம்மமே, பலவித ரூபங்களை உடையவளே, வடிவம் இல்லாதவளே, என்னை காத்தருள் என் தாயான உமையவளே!

**பலன்: மன நிம்மதி, மகிழ்ச்சி.**

அன்றே - உலகில் பெற்ற அன்றே,
நன்றே - ஞாயமா?, அருவே - உருவமற்றவள்,
ஒன்றே - எல்லாமாக இருப்பவள்

### பாடல்–31

***உமையும் உமையொரு பாகனும், ஏக உருவில் வந்து, இங்கு
எமையும் தமக்கு அன்புசெய்ய வைத்தார், இனி எண்ணுதற்கு
சமயங்களும் இல்லை, ஈன்றெடுப்பாள் ஒரு தாயும் இல்லை
அமையும் அமையுறு தோளியர் மேல் வைத்த ஆசையுமே.***



உமா தேவியும், உமா தேவியை இடப்பாகத்தில் கொண்ட மாதொரு பாகனான சிவபெருமானும், ஒரே வடிவில் அதாவது அர்த்தநாரீஸ்வரராக இந்த பூவுலகுக்கு எழுந்தருளி நான் இருக்கும் இந்த இடத்தில் அடியேனுக்கு காட்சி தந்து என்னைப் போன்ற எளிய அடியார்களையும் தனக்கு (அபிராமி) பக்தி செய்ய வைத்தார். இனிமேல் அடியேனுக்கு சிந்தித்துப் பார்ப்பதற்கு வேறு ஏதும் சமயங்கள் இல்லை. இனி பிறவியினை உண்டாக்கும் தாயும் இல்லை. (இனி மறுபிறவியே இல்லை) பசுமையான மூங்கில் போல் தோள் படைத்த பெண்கள் மேல் எனக்கிருந்த ஆசையும், மோகமும் இத்தோடு தீர்ந்தது.

**பலன் : பற்றுகள் அகலும், இறையருள் சேரும்.**

உமையொரு பாகன் - அர்த்தநாரீஸ்வரர்,
அமையும் - நீங்கும், சமயம் - இறைவனை அடையும் வழி,
அமையுறு தோளியர் - மூங்கில் போன்ற தோள் படைத்த பெண்கள்.

- தொடரும்

# உங்கள் பக்கம்

2022 HAPPY NEW YEAR

அன்பும், பண்பும், ஆன்மீகமும், வீரமும், விவேகமும் நிறைந்த செங்குந்த சொந்தங்களுக்கு, வணக்கம்.

**"பருப்பின் சுவையை அகப்பை அறிய முடியாதது போல தமது வாழ்நாள் முழுவதும் அறிஞர்களோடும், நல்லவர்களோடும் பழகினாலும் மூடன் அறத்தின் இயல்புகளை அறியமாட்டான்."**

நமது செங்குந்த / கைக்கோள சொந்தங்களை மிகவும் பிற்பட்டோர் பட்டியலில் சேர்க்கவும், இழந்த உரிமைகளை மீட்கவும், நெசவுத்தொழில் மேம்பாட்டிற்காகவும் தலைமை அறிவிக்கும் தமிழகம் தழுவிய மாபெரும் போராட்டத்திற்கு மிகப்பெரிய ஆதரவும், ஆலோசனைகளையும் வழங்கிக் கொண்டிருக்கும் செங்குந்த சொந்தங்கள் அனைவருக்கும் நன்றிகள்.

கடந்த இரண்டு ஆண்டுகளாக கொரோனா தாக்கத்தால் சங்க செயல்பாடுகளில் சற்றே தளர்ந்துள்ள உறுப்பினர்கள் வரும் புத்தாண்டில் புத்துணர்ச்சியோடு செங்குந்தர்கள் அதிகம் வசிக்கும் பகுதிகளில் புதிய கிளைகளை உருவாக்கி, உறுப்பினர்களை சேர்த்து சங்கப் பணிகளில் இணைத்துக் கொள்ள வேண்டுகிறோம்.

செங்குந்தமித்திரன் தோன்றிய மாதமாம் ஜனவரி மாதத்தில் அதிகப்படியான புதிய சந்தாதாரர்களை சேர்த்து, புதுப்பிக்காத உறுப்பினர்கள்



சந்தாவைப் புதுப்பித்து தலைமைச் சங்கத்தின் கரத்திற்கு மேலும் வலு சேர்க்க வேண்டுகிறோம்.

ஜனவரி மாதத்தில் வரும் கொடிகாத்த தியாகி திருப்பூர் குமரனின் நினைவு நாள், தவத்திரு. ஞானியாரடிகள் நினைவுகளை நினைவு கூறுவோம்.

அரசு அறிவித்துள்ள விதிமுறைகளுக்கு உட்பட்டு சமூக இடைவெளியைப் பின்பற்றி கொரோனா தடுப்பூசி அனைவரும் செலுத்தி ஒமைக்கரான் பரவலைத் தடுத்து அரசுக்கு ஆதரவு கொடுத்து நம்மையும் , நம்மைச் சார்ந்த சமூகத்தையும் காப்போம்... நாளைய தலைமுறைக்கு நன்மை செய்வோம்....

**குறைகளை தன்னிடம் தேடுபவன் தெளிவடைகிறான்!**
**குறைகளைப் பிறரிடம் தேடுபவன் களங்கப்படுகிறான்!**

மீண்டும் சந்திப்போம்

KPK செல்வராஜ்

# தலைமைச் சங்கத்தில் புதியதாகப் பொறுப்பேற்கும் பொறுப்பாளர்களுக்கு வாழ்த்துக்கள்

## புரவலர்கள்



**திரு.T.தேவராஜன்**
செய்யாறு



**திரு.U.V.சடையப்பன்**
சேலம்



**திரு.S.K.C.குப்புசாமி**
திண்டுக்கல்



**திரு.M.K.S.உத்தண்டி**
தருமபுரி



**திரு.இ.தனசீலன்**
பரமக்குடி



**திரு.M.உமாபதி**
சென்னை



**திரு.K.M.G.இராஜேந்திரன்**
குடியாத்தம்



**திரு.A.K.ரகுநாதன் IRS**
திருப்பூர்



**திரு.R.சிவானந்தம்**
ஈரோடு

## கௌரவ ஆலோசகர்கள்



**திரு. G.K.பாரதி**
கோபிச்செட்டிபாளையம்



**திரு. A.சந்திரசேகரன்**
கோயமுத்தூர்



**திரு. M.சிவக்குமார்**
சென்னை



**திரு. வெ.தண்டபாணி**
திண்டுக்கல்



**திரு. P.K.குருநாதன்**
திருப்பூர்



**திரு. S.சுந்தர்**
திருச்செங்கோடு

